உ

குமரன்றுணை

# கருமலையாண்டவர்

# துதிமஞ்சரி.

—:o:—

IMSO320-1

இஃது

சேலம்ஜில்லாக் காட்டுப்பாளையம் ஜமீன்தார்.

ம-ா-ா-ஸ்ரீ

கே. ராசாக்கவுண்டரவர்கள்

விருப்பத்தின்படி

சேற்றூர்ச் சமஸ்தான வித்துவான்

எம். ஆர். கந்தசாமிக் கவிராயரால்

இயற்றப்பெற்று

ஷை சமஸ்தான வித்துவான்

மு. ரா. அருணாசலக் கவிராயரால்

பரிசோதிக்கப்பெற்று

சென்னை:

அல்பினியன் அச்சியந்திர சாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது.

1902.

உ

குமரன்றுணை.

கருமலையாண்டவர் பேரில்

# துதிமஞ்சரி.

முதலாவது

## அபயதுவயப் பதிகம்.

—:o:—

### காப்பு.

நேரிசை வெண்பா.

செண்பகமா தேவிவளர் தேசிகன்மீ தேபதிகம்
பண்பகலா நற்றமிழாற் பாடவே—விண்பாரு
கைக்குஞ் சரத்தான் கயமுகனைச் செற்றவைந்து
கைக்குஞ் சரத்தானே காப்பு.

சந்தக்கொச்சகம்.

நனைத்தமலர் மிசைக்கடவு ளளிர்ப்பிறையை முடித்தபதி
புனத்திலரி முதற்பெரியர் புகழ்ச்சிபுனை யருட்குமர
மனத்திலுனை யிருத்திநிதம் வழுத்துகவி தரித்தெளிய
னினைத்தவர மளித்தருள்க நினக்கபயம் நினக்கபயம். (க)

புலப்பகைக ளிருக்கவரு புறப்பகையு மிகுத்திடவி
னலக்கண்வர வரப்பெருகி யலைப்பதிது சகிக்கரிது
வலத்தசுரர் செருக்கழிய மடித்தமரர் பதிக்கரசு
நிலைக்கவருள் கொடுத்தகுக நினக்கபயம் நினக்கபயம். (உ)

சுகக்கடலி தெனப்பெரிய துயர்க்கடலி லமிழ்த்தவெழின்
மிகுத்துவரு பரத்தையர்கள் விளைக்குமயல் விலக்கியரு
டிகைத்தமல ரவற்கிறைவர் தெரித்தபிர ணவப்பொருளை
நிகழ்த்துமொரு தனிக்குரவ நினக்கபயம் நினக்கபயம். (௩)

மனத்திலுறு துயர்ப்புணரி வறக்கவுயர் சுகச்சலதி
தனைச்சிறிது நிறைக்கவரு டரிற்குறைவெ னுனக்குளது
புனத்திலுறை குறச்சிறுமி புணர்ச்சிமகிழ் வுறக்கருதி
நினைத்தவடி வெடுத்தருளும் நினக்கபயம் நினக்கபயம். (௪)

அளிப்பதுன தருட்குரிய தறப்பெரிய துயர்ப்புணரி
குளிப்பவெனை விடுப்பினருள் கொடுப்பரெவர் திசைக்கரிகள்
சுளிப்பவரு மரக்கர்துடி துடிப்பவிரி தலைப்பணிக
ணெளிப்பமயி னடத்துபவ நினக்கபயம் நினக்கபயம். (௫)

கறுத்தயம படர்க்கதிபர் கறுத்துவரு மிடத்தவரை
யொறுத்துநல மியற்றுபவ ருனைத்தவிர வொருத்தரிலை
குறித்தபடி விடுத்துநிலை குலைத்தலையு மனத்தைநிலை
நிறுத்தும்வழி பெறச்செய்குக நினக்கபயம் நினக்கபயம். (௬)

புனற்புணரி கலக்கமலை பொடிப்பவயில் விடுத்தபர
வெனக்குரிய வுயிர்த்தலைவ னெனக்கருதி யிருக்குமென்வல்
வினைப்புணரி துயர்ச்சிகரி விலக்கவருள் கொடுத்திடுத
னினக்கரிய திலைக்கருதி னினக்கபயம் நினக்கபயம். (௭)

திகைத்தலையு மனத்தினிலை திருத்துவதை யொழித்தவர்கள்
புகழ்ச்சிவர நயச்சுவைகொள் புதுக்கவிக ளியற்றியுமென்
மகிழ்ச்சியொடு நினக்கடியர் மலர்க்கழல்க டலைக்கொண்மன
நெகிழ்ச்சிமிக வரச்செய்குக நினக்கபயம் நினக்கபயம். (௮)

சூாக்குகிகர் குணக்கயவர் கொடுக்குநிதி தனைக்கருதி
யுருக்கமிகு தமிழ்க்கவிக ளுரைத்தலைதல் விடுத்துனது
மருக்கமல நிகர்த்தபதம் வழுத்துமடி யவர்க்கடியர்
நெருக்கமுற வினிச்செய்குக நினக்கபயம் நினக்கபயம். (௯)

வருக்கரிய முதற்பொருளை வகுத்தருளு முதற்குரவ
சிகிப்பரியை நடத்திவரு திறற்குமர வினித்துயரிற் [ரை
புகுத்துவதை யொழித்தனருள் பொருத்துகவெ னுயிர்க்குயி
நிகர்த்தகரு மலைக்கடவு ணினக்கபயம் நினக்கபயம். (௧௦)

முற்றிற்று.



உ
குமரன்றுணை.

இரண்டாவது

## திருவருள்வேட்கைப் பதிகம்.

—:o:—

ஒன்றாகிப் பலவாகி யுளதாகி யுளதெதுவு
மன்றாகி யுருவாகி யருவாகி யருவுருவாய்
நின்றாய்வல் லசுரர்மன நிலைகலங்க மலைகுலுங்க
வென்றாய்நின் றிருவருளே வேண்டுவெனிச் சிறியேனே. (க)

உலகாகி யுலகிலுறு முயிராகி யுயிர்க்குயிரா
யிலகாதி பரம்பொருளே யீராறு கரப்பரனே
பலகாத மலர்மணக்கும் பழநிமுதற் பலபதியாய்
விலகாதுன் றிருவருளே வேண்டுவெனிச் சிறியேனே. (உ)

நாலான மறையாகி நவிலுமதன் பொருளாகி
நூலான வெவற்றாலு நுவலரிய பரம்பொருளாய்ச்
சேலான விழிபடைத்த தெய்வானை மணந்தவடி
வேலாநின் றிருவருளே வேண்டுவெனிச் சிறியேனே. (ங)

கரும்பனைய மொழித்தெய்வ கன்னியரைக் கலப்பதுவும்
பெரும்புவியைப் புரப்பதுவும் பிறபதவி யெதுவெனினுந்
துரும்பனைய வெனவெறுத்துத் தோகைமயில் வாகனத்தை
விரும்புறுநின் றிருவருளே வேண்டுவெனிச் சிறியேனே. (ச)

நித்தமுமுன் கழன்மலரை நெஞ்சிருத்தி யஞ்சலித்துப்
பத்திபுரி யாரெடுத்த பாழ்ஞ்சனனப் பலனெதுவோ
வத்தனுக்குப் பிரணவத்தி னரும்பொருளைத் தரும்பரம
வித்தகநின் றிருவருளே வேண்டுவெனிச் சிறியேனே. (ரு)

கையாதி யுறுப்படங்கிச் சாதடைத்துக் கண்ணிருண்டு
பொய்யாகு மெய்யினுயிர்ப் பொருத்தமறக் கறுத்தநிற
வெய்யான்வந் தணுகாத விதம்புரக்கக் கடம்புபுனை
மெய்யாநின் றிருவருளே வேண்டுவனிச் சிறியேனே. (சா)

ஆதியுமாய் நடுவுமா யந்தமுமா யவைகடந்த
சோதியுமாய்த் துரியமுமாய்த் துரியாதீ தப்பொருளா
யோதியயன் முதற்றேவ ருணர்வரிய குருவாம்வேல்
வேதியநின் றிருவருளே வேண்டுவனிச் சிறியேனே. (எ)

உரகாதி பதியோடி யொளித்தலற நடத்துமயிற்
றுரகாகுக் குடமிலங்குந் துவசகரு ணாகரனே
நரகாதி பதிபுரியும் நடுக்கமறக் குறத்திமகிழ்
விரகாநின் றிருவருளே வேண்டுவனிச் சிறியேனே. (அ)

பழியாவு மெனதாகும் படியலைந்துன் றுதிமாலை
மொழியாது மடந்தையர்கண் மோகவலைச் சிக்கியுழல்
வழியாவும் விடுத்துனையே வணங்குதற்குப் பன்னிரண்டு
விழியாய்நின் றிருவருளே வேண்டுவனிச் சிறியேனே. (கூ)

சிற்பரைகண் ணுளமகிழுஞ் சேயேயின் றேனொழுகு
நற்பதும மலர்த்தவிசு நான்முகனும் வானவருங்
கற்பகநன் மலர்தூவிக் கனிந்துதொழுங் கருமலையாம்
வெற்புறநின் றிருவருளே வேண்டுவனிச் சிறியேனே. (கo)

முற்றிற்று.



உ

குமரன்றுணை.

மூன்றாவது

# குமரநாதப் பதிகம்.

—:o:—

அறத்துறை வேண்டிலே னன்பு பூண்டிலேன்
மறத்துறை விடுத்திலேன் வஞ்ச னுயினுஞ்
சிறக்குநின் றிருவருள் செய்ய வேண்டுமால்
குறத்தியை யணைத்தருள் குமர நாதனே. (க)

தஞ்சமென் றுனதடி சார்ந்த போதெலா
மஞ்சலென் றருளினை யாக வின்றுநீ
வஞ்சகம் புரிந்திடில் வந்து காப்பரியார்
குஞ்சரி மனமகிழ் குமர நாதனே. (உ)

தரணியி னின்புகழ் சாற்றும் பின்னரும்
விரவிய துயரிடை மெலித லாகுமோ
பரண்மிசை மருவிய பாவை யாவல்சேர்
குரவகன் மலர்புனை குமர நாதனே. (ங)

கறுத்தமை விழிக்கணை காட்டிக் கைப்பொருள்
பறித்திடு பரத்தையர் பழக்க முற்றிலும்
வெறுத்துனை வழுத்திட விரும்பி னேனுளங்
குறித்தது கொடுத்தருள் குமர நாதனே. (ச)

சூரனைத் தொலைத்தருள் சுரந்து வானவர்
சீருறப் புரிந்தமெய்த் தேவ னீயலா
லாருயிர்க் கொருதுணை யாவர் யாவரே
கூரயிற் காதல குமர நாதனே. (ரு)

வணக்கமும் பிறர்பழி வழுத்த நெஞ்சிடைத்
துணுக்கமு மினதடித் தொழும்புந் தூயநல்
லிணக்கமு மெளியனேற் கென்று வாய்க்குமோ
குணக்கட லாகிய குமர நாதனே. (சு)

நொடிப்பொழு தினைத்துதி நுவன்ற பேருள
மிடிக்குழம் வினைக்கும்வே றெதற்கு மஞ்சுமோ
துடித்திடு மசுரரைத் தொலைத்து வானவர்
குடிக்கொரு காவல்செய் குமர நாதனே. (எ)

இருளொளி மிடிநிதி யின்பு துன்பெலா
மொருவகை கருதுநல் லுணர்வு சேர்வனோ
மருமலி வனசமா மலரில் வாழ்விதி
குருபர னாகிய குமர நாதனே. (அ)

சுற்றமுந் துணைவியுஞ் சுதரு மன்பரும்
பெற்றவர் முதலிய பிறருங் காலனு
ருற்றுழி யுதவுவா ரொருவ ரில்லையெக்
குற்றமும் பொறுத்தருள் குமர நாதனே. (கூ)

சலம்புரி பலபகை சார்ந்த போதுநின்
னலம்புரி பதமலர் நாடல் விட்டிலே
னிலங்குநல் லருள்புரி யென்று மேழையேங்
குலம்பணி கருமலைக் குமர நாதனே. (க0)

முற்றிற்று.



உ
குமரன்றுணை.
நான்காவது
# கலிவிருத்தப் பதிகம்.

—:o:—

கொலைவாள் விழியார் கொடுமா யையிலே
யுலைவாய் மெழுகொத் துலையத் தகுமோ
மலைவா ழொருமா மணியே மணிசே
ரலைவா யுறைவா யருள்வே லவனே. (க)

வந்துற் றழியும் மனைமக் களெனும்
பந்தக் கடலிற் படியத் தகுமோ
சந்தத் தமிழ்மா முனிவன் பரவுங்
கந்தப் பரனே கருணா கரனே. (உ)

கஞ்சத் தவிசுங் கமலைப் புயமும்
மஞ்சுக் கரசும் மதியேன் மதியேன்
கொஞ்சிக் குலவிக் குறமின் புலவிக்
கஞ்சித் தொழுவே ளருளைப் பெறினே. (ங)

ஓடித் திரியா துனையெப் பொழுதும்
பாடிப் பரவும் படியென் றருள்வாய்
வாடிக் குறமான் மகளைத் தனியே
தேடித் திரியுஞ் சிவதே சிகனே. (ச)

கருதா துனையே கழறு துலகில்
விருதா வினிலே விளியத் தகுமோ
நிருதா திபனேர் நெடுமார் புருவப்
பொருதா ரயில்வேல் விடுபுண் ணியனே. (ரு)

உறவா யொருதா யுதாத் தின்றும்
பிறவா வகைநீ பெரிதாள் குவையோ
துறவார் முனிவோர் சுரரா தியரும்
மறவா மணியே மயில்வா கனனே. (சு)

பாதா ரவிருப் படையா துயர்நல்
விரதா திகளே விழையப் புரிவாய்
வரதா நெடுமோன் மருகா முருகா
சரதா குமரா தமிழ்நா யகனே. (எ

பொருளுந் தகவும் பொறையுங் கொடையுந்
தெருளுங் குணனுந் திறமுந் தருவாய்
மருளும் படிசூர் மடியச் சுாருக்
கருளும் பரனே யறுமா முகனே. (அ)

என்னன் புனதா ளிடையே யுடையே
னின்னந் துயருற் றிடவோ கடவேன்
றன்னந் தனியே தளரா வகையென்
முன்னின் றருள்சண் முகவா ளவனே. (கூ)

தினமா தவமே செயமே வுகிலேன்
மனமா சறுமோர் வரநீ தருவாய்
கனமார் பொழில்சூழ் கருமா மலைவா
ழனகா வபயா வருண்மா மணியே. (கo)

முற்றிற்று.



உ

குமரன்றுணை.

ஐந்தாவது

## கருமலைக்குமரநாயகப் பதிகம்.

—:o:—

நித்தமும் விவகா ரத்தினி லலைந்து
நெட்டுயிர்ப் பெறிந்துபொய் தெரிந்து
சத்தியம் விடுத்துப் புத்தியுங் கொடுத்துத்
தளருவே னென்னைவந் தடுத்துப்
பத்தியுங் கொடுத்துத் துத்தியந் தொடுத்துன்
பணிசெயக் கருணைதந் தருள்வாய்
கத்திவண் டினங்கண் மொய்த்திடும் பொழில்சூழ்
கருமலைக் குமரநா யகனே. (க)

ஆணவக் கொடிய பேய்பிடித் தாட்டி
யலைப்பது சகிப்பதற் கஞ்சி
நாணிநின் சரணஞ் சரணெனப் புகுந்தே
னுன்மறை மந்திரப் பொருளே
தாணுதே சிகனே மூவிரு முகனே
சந்ததம் போற்றுமெய் யடியார்
காணுதற் கெளிய கருணையங் கடலே
கருமலைக் குமரநா யகனே. (உ)

புழுத்துநாய் நரிக டேடிவந் திருந்து
புசித்திடும் புலையுடல் புனன்மே
லெழுத்தெனப் பெரியோ ரிசைக்கவு மலைமே
லெழுத்தென மதித்திருந் துண்டு

கொழுத்துநாள் கழித்த கொடியனே னெனையாட்
 கொள்வையோ தெய்வமங் கையர்கள்
கழுத்துமங் கலத்தைக் காத்தமெய்ப் பரனே
 கருமலைக் குமரநா யகனே. (ங)

பஞ்சபா தகமும் பறக்கும்வல் வினையும்
 பறக்குநின் காட்சியா லென்று
செஞ்சொலா ரணங்கள் பறையடிப் பதுமிச்
 சிறியனே னளவினிற் பொய்யோ
வஞ்சமோ கலியின் மாயமோ குற்றமின்
 மயக்கமோ கடைக்கணித் தருள்வாய்
கஞ்சமா மலரி லஞ்சமார் வாவிக்
 கருமலைக் குமரநா யகனே. (ச)

பற்பல கோடி வெற்புக டேடிப்
 பயிலுநின் றிருவருள் நாடி
நற்புகழ் பாடி விற்பனர்க் கூடி
 நலமுறப் பெறுவனோ நாயேன்
சொற்பொருள் கடந்த சிற்பர வடிவே
 தூயநால் வேதத்தின் முடிவே
கற்பக தருவே யற்புத குருவே
 கருமலைக் குமரநா யகனே. (ரு)

மையனேர் மனத்து வஞ்சக ருலக
 வழக்கிலே பொழுதெலாங் கழித்தா
லையனே நினது திருவருட் கணிய
 னுவனோ வென்செய்வே னரசே

மெய்யனே துயரம் விலக்கியாண் டருள
வேண்டுவே னீண்டபன் னிரண்டு
கையனே யடியார் களைகணே வளமார்
கருமலைக் குமரநா யகனே. (சு)

வஞ்சகஞ் சூது களவுபொய் வாது
மடவியர் தீதுசேர் கோது
நெஞ்சக மீது கொஞ்சம லாது
நிறையுநா னுய்தலெப் போது
தஞ்சமென் றுனையே நம்பினே னெனையே
சாமிநீ காத்திட நினையே
கஞ்சனைச் சிறையில் விடுத்திடும் பரனே
கருமலைக் குமரநா யகனே. (எ)

வழக்கிலே மிகவும் வல்லமியா மெனவே
வாதுசெய் வாதிகள் வாத
முழக்கிலே முழுப்பொய் மொழியிலே மடவார்
முயக்கிலே கொலைமுதற் பலவாஞ்
சழக்கிலே காலங் கழிப்பது தகுமோ
சகித்திடேன் சாமிநின் கமலக்
கழற்குநா னுரைக்குங் கவியுமேற் றருள்வாய்
கருமலைக் குமரநா யகனே. (அ)

பதிபசு பாசத் தியற்கையுங் கன்மப்
பகுதியுந் திருவருட் பாங்குந்
துதிசெயு முறையு மெதுவெனச் சிறிதுந்
துருவிலேன் வெருவிலே னவமே
சதிபுரி மடவா ரெங்குளா ரெனவித்
தமுமலைந் துழல்வது தகுமோ

கதிதரு வழியைக் காட்டிநீ யாள்வாய்
கருமலைக் குமரநா யகனே. (கூ)

உலகமெங் கணுஞ்சென் றுலைவுறு துனையே
யொருதனித் தெய்வமாக் கொளுமெங்
குலமுழு தடிமை யாக்கியாண் டருளுங்
குழகனே யழகனே யடியேன்
பலபல துயரப் பாடுறு தருட்கண்
பார்ப்பதுன் கடமைகாற் சிலம்பு
கலகலென் றொலிக்க மயின்மிசை வருவாய்
கருமலைக் குமரநா யகனே. (க0)

முற்றிற்று.

வேறு.

பன்னிரு விழிகள் போற்றி பன்னிரு கரங்கள் போற்றி
பன்னிரு புயங்கள் போற்றி பாதபங் கயங்கள் போற்றி
பன்னிய வடிவேல் போற்றி பதாகையாஞ் சேவல் போற்றி
பன்னிய ரிருவர் போற்றி பணிமயில் போற்றி போற்றி. (க)

கருமலைப் பரனே போற்றி கருணையங் கடலே போற்றி
யொருதனிக் கடவுள் போற்றி யுமையருள் புதல்வா போற்றி
யரிதிரு மருகா போற்றி யாரணப் பொருளே போற்றி
திருவடிக் கமலம் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி.()

கந்தநா யகனே போற்றி கடவுண்மா மணியே போற்றி
சிந்தைநோய் தீர்த்தாய் போற்றி தேவரைக் காத்தாய் போற்றி
வந்தருள் வரதாபோற்றி மயிலயி லுடையாய் போற்றி
செந்தமிழ்க் குருவே போற்றி சிற்பரா போற்றி போற்றி. (ங)



உ

முருகன்றுணை.

ஆறவது

ஸ்ரீமத் செண்பகமாதேவி ஆண்டவர் பேரில்

## தேவரட்சகராஜப் பதிகம்.

—:o:—

ஆசிரியவிருத்தம்.

பூமேவு வாழ்வையுறு புதல்வர்பிழை நெஞ்சிற்
பொறுக்காத தாயருண்டோ
புந்திவர வொருபோது சினவினுந் துன்பம்
பொருந்தாது காப்பரன்றே
மாமேவு கயிலாய வள்ளல்புத் திரசிகா
மணியான ராஜப்பனுன்
மலர்ப்பத மகத்தினி னினைத்துமிகு பத்தியொடு
வந்துனது கோயினண்ணிக்
காமேவு மலரிட்டு வாழ்த்தியுந் திருவருள்
கனிந்திடா துறுதலழகோ
கருணைங்கி லக்கணம் பொறுமையன் றேவுனது
கருணைதர வேண்டுமையா
தேமேவு தண்டலைகள் கொண்டலைத் தள்ளிமேற்
செல்லுமெழில் புல்லும்வளமார்
செண்பகம காதேவி பண்புபெற வேமேவு .
தேவரட் சகராஜனே. (க)

மாமரமு மலையும் பிளக்கவலை யெறிகடல்
வறக்கமலர் மீதிருக்கும்
வானவன் வெருக்கொளக் காட்டத் தகுந்தநின்
மனத்தினெழு சிறிதுகோபம்

பூமியி லுதித்தநா டொட்டுவழி வழியடிமை
பூண்டுனது பாதமலரெப்
போதுமற வாதுமன மீதுவர மாதுதி
புகன்றுவரு ராஜப்பனுஞ்
சோமனிடம் வைப்பினடி யவரெலா முன்னைத்
துதிப்பரோ தகுதியாமோ
துங்கமுறு பொறையியல்பு தேவருக் கிலையோ
துலங்குநின் கருணைதருவாய்
தேமரத் திசைவண்டு காமரத் தொனிகண்டு
தேவமட வார்வியக்குஞ்
செண்பகம காதேவி பண்புபெற வேமேவு
தேவராட் சகராஜனே. (உ)

புலவரை விரும்பலாற் கயிலாச மன்னுதவு
பொற்பா விராசநாமம்
பூண்டதா னின்னருட் சத்தியால் வெஞ்சூர்
பொருந்தாம லோட்டுதிறலா
விலகுவன வூரிலுறை ராஜப்ப னமையொப்ப
னென்றோ ரணுக்கோபமு
மெய்திடே னிற்குவழி வழியடிமை கண்டா
யிரங்கிநின் கருணைதருவாய்
கலகவிழி யார்மயக் கந்தவிரு முண்மையோ
கர்த்தரும் வணங்குவள்ளி
கண்கண்டு மகிழுமண வாளனே வேலனே
கடலாடை நிலமகட்கோர்
திலகமென வெவ்வளமு மென்றுமேன் மேலுஞ்
செழிக்கப் பொருந்துமகிமைச்
செண்பகம காதேவி பண்புபெற வேமேவு
தேவராட் சகராஜனே. (ந)

சஞ்சல மிகக்கொண்டு நெஞ்சுருகி யேவிண்டு
சாற்றுதுதி கேட்டிரங்கிச்
சரவணத் திடைவந்து தேவரைக் காத்திடு
தயாளுவே நின்னையன்றி
விஞ்சவொரு தேவரையு மெண்ணுத தோர்பெரிய
விரதமே விரதமாக
மேவியுறை ராஜப்ப மன்னுளக் கவலையை
விலக்கா திருத்தறகுமோ
கொஞ்சமு மிரங்காத வகையேது சவ்வாது
குங்கும படீரவாசக்
கொங்கைம்ட வாரிருவர் தங்குமணி யேயருள்
கொடுக்கவிது தருணமையா
செஞ்சலச மேவியுறை யஞ்சமிசை தாவவெண்
டிரைவீசு வாவிசூழுஞ்
செண்பகம காதேவி பண்புபெற வேமேவு
தேவரட் சகராஜனே. (சு)

ஒருமலைக் குகையிடைத் தனதுகுறை நீக்குவா
னுத்தமக் கீரவாண
னுற்றவுட னடைவித்து நீராடி வருமுனவ
னோதுகவி கேட்டிரங்கிச்
செருமலையு மப்பூதம் வீழச் செயித்திரட்
சித்தவ னீயல்லவோ
தேவதே வாவுனது பாதமலர் நம்பிநே
சித்தரா ஜப்பனென்னுந்
தருமலைக்கு கையிலெதிர் வந்துநின் றிருவரு
டாராதுறுத னீதியாமோ

சாமிநீ யின்னமுஞ் சோதனை புரிந்திட
   றகாதுததி யீதுவருவாய்
திருமலைக் கும்படி பெருஞ்செல்வ மோங்கிச்
   செழித்தமெய் யன்பர்பலர்வாழ்
செண்பகம காதேவி பண்புபெற வேமேவு
   தேவராட் சகராஜனே. (ரு)

உள்ளமெய்ப் பிணியகல வேகசப் பாமருந்
   தூட்டியஃ துண்டதன்ப
மோட்டமிகு மருமைபா ராட்டிவரு தாய்போல
   வுற்றபழ வினையனைத்துந்
தள்ளவித் தனைதுன் பியற்றினை யினிக்கருணை
   தந்திரட் சிக்கவேண்டுஞ்
சாமியே ராஜப்ப பூமனுக் குனையலாற்
   சாற்றுதுணை வேறுமுண்டோ
வள்ளலே பன்னிருகண் மணியேப்ர மானந்த
   வடிவே குணக்குன்றமே
மயில்வாக னநித்ய பரிபூர ணசத்ய
   வசனக ராகரையிலாத்
தெள்ளமிர்த வாரியே கருமலை யுறுந்தேவர்
   சிங்கமே கங்கைசுதனே
செண்பகம காதேவி பண்புபெற வேமேவு
   தேவராட் சகராஜனே. (சா)

கையினிற் குடநீ ரெடுத்துநின் றிருமேனி
   கவினுறும் படியாட்டினன்
கமழ்பத்ம பதமீது மெய்யன்பு நீருங்
   கலந்துவந்தே யாட்டினன்

வையகத் தவருநீ யுங்குளிர வாயால்
வழுத்துதுதி யமுதாட்டினன்
மனம்வாக்கு மெய்யான மூன்றுநின் னன்பினது
வயமாக்கி நிற்கின்றனன்
மெய்யுற்ற தெய்வமே நின்கோப வெம்மையை
விலக்கிரா சப்பனுக்கு
மேலான நின்கருணை வெள்ளங் கொடுத்திடேல்
வேண்டும்வெகு விரைவில்வருவாய்
செய்யபங் கயவாவி வையமெங் கணுமேவு
திவ்யதெண் டிரைவீசுசீர்ச்
செண்பகம காதேவி பண்புபெற வேமேவு
தேவராட் சகராஜனே (எ)

உள்ளங்கை நீருமொரு பச்சிலையு மிட்டவரை
யுவணமுந் தருவுமலரு
முற்றிடப் புரிபரம னற்புதச் சுதகுமா
வுனதுதிரு முன்புநண்ணிக்
கள்ளங்கொ ளாதுபல குடநீரு மாலையுங்
கமழ்சந்த முங்கனிகளுங்
கருதுமற் றெவையுமுன் னோர்முறைப் படிதந்து
காத்துநிற் பதையறிந்தும்
பள்ளம்பொ ருந்தவரு புனல்போற் கடைக்கணாற்
பாராதி ருத்தறகுமோ
பாக்கியமிம லாமுதவி ராசப்ப னுக்குனருள்
பாலிக்க வேண்டுமரசே
தெள்ளும் புனற்றடந் தள்ளுந் தனித்திவலை
தேவரும் விரும்பமேவுஞ்

செண்பகம காதேவி பண்புபெற வேமேவு
தேவராட் சகராஜனே. (அ)

பாடிவரு புலவர்கவி தன்மீது கொள்ளாது
பத்தியொடு நின்மீதிலே
பாடப் புரிந்துளம் பூரித்து வந்திடும்
பான்மையான் கனவுதனிலு
நாடிநின் றுதியே நவிற்றிவரு நன்மையா
னல்லவரை யென்றுமறவா
ஞட்டுதொழி லியாவுமுன் செயலன்றி யில்லையென
நண்ணுதிட சித்தமுடையான்
பீடுபெரு ராசப்ப னுள்ளத்தி லின்பம்
பிறந்திடக் கருதியுன்றன்
பேரருட் கனியுதவி யாண்டருள வேண்டுமெழில்
பெற்றகுற மடமங்கையைத்
தேடிவெகு மோடியொடு கூடிவிளை யாடிமகிழ்
தேவனே பரமகுருவே
செண்பகம காதேவி பண்புபெற வேமேவு
தேவராட் சகராஜனே. (கூ)

பின்னரென வெண்ணுது சொன்னவுட னின்னருள்
பிறங்குகோ யிற்கணவந்த
பெற்றியுறு ராசப்ப னுற்றகிளை வாழப்
பெருஞ்செல்வ மென்றும்வாழ்க
மன்னிய மனத்தின்பம் வாழநெடு நாளாயுள்
வாழமழை வாழநின்மேல்
வாழ்த்துதுதி வாழவவ னெண்ணிய வெலாம்பெற்று
வாழநின் கருணைவாழப்

பன்னுமெய் யன்படியர் வாழவவ னுயர்புத்ர
பாக்கியம் பெற்றுவாழப்
பகைவரஞ் சிடவெற்றி பெற்றுவா ழக்கருணை
பாலிக்க வேண்டுமமுதே
தென்னைமர மமரர்பதி முன்னமர நன்னீர்
செழித்துவள மோங்குதிவ்ய
செண்பக மகாதேவி பண்புபெற வேமேவு
தேவராட் சகராஜனே. (௧0)

முற்றிற்று.



உ

முருகன்றுணை.

ஏழாவது

# கருமலை ஆண்டவன் மாலை.

—:o:—

## காப்பு.

கருமலையில் வீற்றிருக்குங் கந்தன் கழன்மேல்
மருவெவாரு பாமாலை வாழ்த்த—வரமுதவுங்
கந்தனுக்கு முன்புபனைக் கையொன்றோ டன்றுவந்த
வைந்துகரத் தும்பிமுகத் தான்.

## நூல்.

பூவார் திசைமுகனும் பொன்னவனுஞ் சங்கரனுந்
தேவா வெனப்பரவுஞ் செவ்வேற் கரத்தோனே
பாவா விரங்கியருள் பாலித்தா யென்றுமெமைக்
காவா திராதே கருமலைவாழ் வேலோனே. (க)

உற்பவித்து வாயா லுரைபடித்த நாண்முதலாப்
பற்பகலு மின்னைப் பரவியுங்கண் பாராயோ
மற்பொருத கும்பமுலை வள்ளிக் கொடிபடருங்
கற்பகப்பூங் கொம்பே கருமலைவாழ் வேலோனே. (உ)

பொல்லாத மாமாயப் பொய்யுடலை மெய்யென்று
பல்லா யிரவகையிற் பாவியேம் பட்டதுய
ரெல்லா முணராயோ எந்தா யுனதுமனங்
கல்லா விரும்பா கருமலைவாழ் வேலோனே. (ங)

வற்ருப் பெருங்கருணை வாரிதியே மாமணியே
சற்ரு வதுன்கிருபை தந்திலையே யாமாகின்
மற்ருர் புரக்க வருவார் மனமடங்கக்
கற்ருர் பரவுங் கருமலைவாழ் வேலோனே. (ச)

உண்ணுக் கொடுவிடமு முண்டடியா ரைப்புரந்த
அண்ணு மலைபா ரருள்குமா னீயலையோ
வெண்ணு திருந்தா லெமக்கார் துணையடியேங்
கண்ணு ரமுதே கருமலைவாழ் வேலோனே. (ரு)

சிந்தா குலமனைத்துந் தீர்த்தருள வந்திடுவா
யெந்தா யெனவடியே மேத்தினது கேட்டிலையோ
தந்தா வளமுகத்தோன் றம்பியெனச் சிந்தைமகிழ்
கந்தா குமரா கருமலைவாழ் வேலோனே. (சு)

சங்கையிலா துன்னடியே தஞ்சமென நம்பியுறு
மெங்கடுயர் நீக்கி யினிதருள வேண்டுமையா
மங்கையொரு பங்கருக்கு வந்துபதே சம்புரிந்தோய்
கங்கையொரு பாலா கருமலைவாழ் வேலோனே. (எ)

ஐயா வருளென் றடியே முரைக்கிரங்கிப்
பொய்யா தருள்புரிந்த புண்ணியனே யெந்நாளு
மையா வகைபுரிவாய் நாதனே பன்னிரண்டு
கையா முருகா கருமலைவாழ் வேலோனே. (அ)

என்னுடைமை யென்னுடல மென்னுயிரென் றெல்லாமே
யுன்னுடைமை யாயிருந்து முற்றதுயர் பாராயோ
பொன்னுடைய தேமல் பொருந்துமுலைப் புத்தேளிர்
கன்னிமண வாளா கருமலைவாழ் வேலோனே. (கூ)

பாட்டா தரித்துதவும் பண்ணவனே நின்னடியார்
கூட்டாம் பெரும்வாழ்வு கொண்டுனது பேருளே
தேட்டா யிருக்கும்வகை செய்துதுய ரெள்ளளவுங்
காட்டா தருள்வாய் கருமலைவாழ் வேலோனே. (௧0)

குன்றுப் பெருங்கருணைக் கொண்டலே யெந்நாளு
நின்றுள் வழுத்திவந்து நிற்பதுநீ பாராயோ
வென்றுயே நின்னெஞ் சிரங்காதோ சற்றுமினிக்
கன்று தருள்வாய் கருமலைவாழ் வேலோனே. (௧௧)

பொல்லாத பாவம் புரிந்தவரே யானாலு
மெல்லாமுன் சந்நிதிமுன் னெய்தினுற் றீராதோ
சொல்லாற் பலகாற் றுதிக்கின்றேங் காத்தருள்வாய்
கல்லாதா ரில்லாக் கருமலைவாழ் வேலோனே. (௧௨)

தஞ்சமென நின்னடியே சார்ந்தோ மெமக்கிரங்கிக்
கொஞ்சமகிழ் காட்டிக் கொடுத்தா யினிமறவோம்
பஞ்சமுகன் பெற்றெடுத்த பாலா சுனைதோறுங்
கஞ்சமலர் மேவுங் கருமலைவாழ் வேலோனே. (௧௩)

பண்டுநொந்த நக்கீரன் பாட்டினுக்குப் பேரின்பங்
கொண்டுவந்து காட்சி கொடுத்தா யெனும்பெருமை
தொண்டுபுரிந் துன்னைத் தொழுமடியே நெஞ்சாரக்
கண்டும்விடு வோமோ கருமலைவாழ் வேலோனே. (௧௪)

தொன்றுதொட்டு நின்னடிக்கே தொண்டுபுரி யெங்களைநீ
யின்றுகஷ்டத் துட்படுத்தி னெவ்விடத்திற் சென்றிசைப்போ
மொன்றுமட்டுஞ் சொல்வோ முதைத்தாலுந் தாய்ப்பசுவைக்
கன்றுவிட்டுப் போமோ கருமலைவாழ் வேலோனே. (௧௫)

சீரார்ந்த செவ்வேற் றிருக்கரனே வெங்கொடிய
சூராந் தகனே சுரர்குலசி காமணியே
நாரார்ந்த பங்மாலை நாயகனே வந்தருள்வாய்
காரார்ந்த சோலைக் கருமலைவாழ் வேலோனே. (கசு)

பாதகமும் புண்ணியமும் பாரிரெல்லா நின்செயலென்
றோதுமறை நூலனைத்து முண்மையே யாமாயிற்
றீதுவினை யெம்மேற் சிறிதுமுண்டோ வந்தருள்வாய்
காதமலர் வீசுங் கருமலைவாழ் வேலோனே. (கஎ)

சேலார் விழியார்க்கே சிந்தைமுழு துங்கொடுத்து
மாலாய்த் தவித்து மயங்கினது போதாதோ
பாலா மொழியுமையாள் பாலா வருள்புரிவாய்
காலா யுதனே கருமலைவாழ் வேலோனே. (கஅ)

மாற்றறியாப் பொன்னே மணியே யெனமயங்கிச்
சாற்றிமட வாரைத் தழுவுங் கொடுமோகச்
சேற்றிலமி ழாமற் றிருவருள்செய் வாய்தென்றற்
காற்றுலவுஞ் சோலைக் கருமலைவாழ் வேலோனே. (கக)

வள்ளக் குவிமுலையார் மாநிதியம் பூமிகளி
லெள்ளத் தனைசுகமு மில்லையிது போதுமையா
வுள்ளக் கருத்தை யுணராயோ ஞானமிலாக்
கள்ளத்தர் காணுக் கருமலைவாழ் வேலோனே. (உ0)

மால்பிடித்தார் போல மயங்கித் தவித்திடுவேம்
பால்பிடித்த வெண்சொற் பனுவலுரை கேட்டருள்வாய்
கோல்பிடித்துப் போகிக் குமரனுய் வள்ளியிரு
கால்பிடித்த கையாய் கருமலைவாழ் வேலோனே. (உக)

வீணான மாயா விகாரத்தி லேயெமது
வாணாளைப் போக்கி வருந்தாம லாண்டருள்வாய்
சேணாடர் வந்துதொழுந் தேவனே நின்பெருமை
காணாதா ருண்டோ கருமலைவாழ் வேலோனே. (உஉ)

தள்ளத் தகாதுனது தண்ணருண்முற் றும்புரிந்து
பிள்ளைத் தமிழ்க்கவியும் பேசவர மீந்திடுவாய்
கொள்ளைக் களிவண்டு கொண்டாடச் சோலையெல்லாங்
கள்ளைக் கொடுக்குங் கருமலைவாழ் வேலோனே. (உங)

பாவிற் சிறந்தகவி பார்த்துத் துதித்துனது
கோவிற் சிகரமும்பொன் கொண்டுசெய வந்தருள்வாய்
தேவிற் சிறந்ததனித் தேவே மரமனைத்துங்
காவிற் சிறக்குங் கருமலைவாழ் வேலோனே. (உச)

வாரணவுங் கொங்கையர்மால் வாரிதிவிட் டுன்னருளாஞ்
சீரணவுந் திண்கரையிற் சேருநா ளெந்நாளோ
நாரணற்கும் வேதனுக்கு நான்மறைக்கு மெவ்வுயிர்க்குங்
காரணனே மேலாங் கருமலைவாழ் வேலோனே. (உரு)

அன்றே யுரைத்தே மதன்படியிந் நாளருள்செய்
யொன்றேபோன் மற்றெவைக்கு முன்னருளைத் தந்திடுவாய்
சென்றே பலகுழுவிற் சேர்ந்துதாய்ப் பால்குடிக்குங்
கன்றே யனையேங் கருமலைவாழ் வேலோனே. (உசா)

சந்த மணிமகுடம் போற்றி தனிநீற்றுச்
சுந்தரஞ்சேர் நெற்றியுடன் றூயநுத லும்போற்றி
வந்து கருணை மலர்ந்ததிருக் கண்போற்றி
கந்தமலி சோலைக் கருமலைவாழ் வேலோனே. (உள)

வள்ளி மகிழ மலரு முகம்போற்றி
தெள்ளமிர்தின் மேலாச் சிறந்த நகைபோற்றி
யொள்ளிலைவேற் செங்கரங்க ளோரீரா றும்போற்றி
கள்ளமிலார் வாழுங் கருமலைவாழ் வேலோனே. (உஅ)

பொற்கொண்ட செங்கமலப் பூவடிக ளும்போற்றி
விற்கொண்ட மஞ்ஞை மிளிர்குக் குடம்போற்றி
யெற்கொண்ட பூணு ரிருமடவா ரும்போற்றி
கற்கண்டே தேனே கருமலைவாழ் வேலோனே. (உ௯)

சீரார் பொருளருமை சேரா திருந்தாலும்
பேராசை கொள்ளுவரிப் பேருலகோ ரென்றுரைப்பார்
பாராயோ ராஜனெனும் பத்தனை நீ காத்திடுவாய்
காராசை கொள்ளுங் கருமலைவாழ் வேலோனே. (௩௦)

தேமார் கடம்பணியுந் தேவே நினைப்புகழிப்
பாமாலைப் பாட்டிலொரு பாட்டா யினுமுரைத்தார்
தாமா யுளுந்திருவுந் தண்ணருளும் பெற்றிடச்செய்
காமாரி போற்றுங் கருமலைவாழ் வேலோனே. (௩க)

நீர்வாழி வாழிபயிர் நீணிதியம் வாழியுயர்
சீர்வாழி வாழிமயில் சேவற் கொடிவாழி
பார்வாழி வாழியிந்தப் பாமாலை நின்கருணைக்
கார்வாழி வாழி கருமலைவாழ் வேலோனே. (௩உ)

முற்றிற்று.



உ

குமரன்றுணை.

எட்டாவது

கருமலையாண்டவன்பேரில் இருபத்துநான்குசீரடி

ஆசிரிய விருத்தம்.

—:0:—

எங்குமொளி தங்கவரு திங்களுறை யுந்திரு
வியங்கிவளர் சங்ககிரியு
மென்றுமறை நின்றுதுதி நன்றுபுக லும்படி
யெழுந்துலவு கஞ்சமலையு
மேர்மிக விளங்குமலை வாய்மலை யெனுங்கிரியு
மெண்ணுமுனி வோர்சுராருட
னெய்திப்பஃ றுதிபுகலும் வைகைப்பொன் மலையினுட
னெழில்பெற்ற நாககிரியுங்
குங்கும மணங்கமழ் தரும்படி நெருங்கியுயர்
கொண்டலுறு தண்டலைகள்சூழ்
குலவுகரு மலையென்ன வுலகுபுக ழிருமூன்று
கோதற்ற திவ்யதலமுங்
கொங்கினிற் படைவீ டெனக்கொண்டு மேவியுறை
குமரனே யமரர்பதியே
கோமளகிர் பாகர வரோதய கிராதர்பெறு
கோலமயி லாடுதருவே
செங்கமல வாவிதிகழ் செண்பக மகாதேவி
சேர்ந்திருந் தெங்குலத்துந்
தெய்வமா யருள்புரியும் ராஜனே நின்னது
திருச்சந் நிதிக்கண்வந்து

தென்னுலவு பொன்னிநதி மன்னியுன் முன்னமிர்த
    தீர்த்தத்தி லாடியுனையுஞ்
செப்புமத் தீர்த்தத்தி லபிடேக மாட்டிச்
    சிறந்தபூ சனைபுரிந்தோ
மங்குநின் னபிஷேக தீர்த்தமுட் கொண்டுவினை
    யாவையுந் தீர்த்தமையா
வனலிடைப் படுமெழுகு மிரவிவாய் வெண்ணெய்யு
    மாகமன முருகுகின்றே
மல்லல்வினை நீக்கியுன் னருள்வாரி தேக்கிமெய்
    யானந்த மாக்கிவைப்பா
யடியர்பிழை யெண்ணுது நெடியவரு டருராஜ
    வண்ணலே மூவர்முதலே. (க)

முற்றிற்று.





உ

குமரன்றுணை.

ஒன்பதாவது

செண்பகமகாதேவி

## ஈசுரன்பேரில் துதிகவி.

—:o:—

கங்கையுங் குளிர்வெண் டிங்களு நதிய
கடுக்கையுந் தும்பையு மரவும்
பொங்குசெஞ் சடையாய் புனிதவெள் விடையாய்
பொலிதரு சூலமாப் படைபாய்
துங்கனும் ராஜ மன்னுளத் தின்பந்
தோன்றநின் திருவருள் புரிவாய்
செங்கய னீர்ச்செண் பகமகா தேவித்
தேவனே கருமலைப் பரனே. (க)

அன்றொரு கவிஞற் காவொரு ராசற்
காரரு ளளித்தனை யாங்கே
யின்றிரு கவிகட் காகரா சனுக்குன்
னின்னருள் கொடுத்திடல் வேண்டு
மன்றலந் துளவ மாயனு மறியா
மலர்ப்பதா மலர்மணத் தோடு
தென்றலுங் கமழ்செண் பகமகா தேவித்
தேவனே கருமலைப் பரனே. (உ)

முற்றிற்று.



உ

குமரன்றுணை.

பத்தாவது

## செண்பக மகாதேவிச்

## செல்லாண்டியம்மைபேரில்

## நாற்பத்தெண்சீரடி ஆசிரிய விருத்தம்.

—:o:—

கடல்சூழ்ந்த புவியுமெண் டிசையுமெவ் வண்டமுங்
கருவுரு றீன்றுவக்குங்
கன்னியாந் தாயே கடக்கரி முழக்கொடு
கனக்குமுற லுற்றவிமயக்
கல்லரச னுக்குமொரு தக்கனுக் குந்தமிழ்க்
கல்வியை வளர்க்குமுகிலாங்
கௌரியர்கு லேசமலை யத்துவச னுக்குமவி
கருணையொடு வருபுதல்வியே
கங்கைச் சடாமகுட துங்கத்ரி யம்பகர்
கரம்பற்று பதபத்மையே
கௌணியர்க் குயர்ஞான வமுதுமுலை யமுதுங்
கலந்தூட்டு கருணாகரீ
கலைமதியும் ரவியுங் களிக்கவெழு பூரண
கலாமதிவி லாசமுகியே
காட்சியாற் றிரிபுர மெரித்தபல் படப்படக்
கவின்மேவு மதாரதரியே
தடமகுட கடகரட விகடகுட மத்தகத்
தழைசெவிப் புகர்முகத்துத்

தங்கிவரு மொருகோடு மிருகாலு முக்கணுஞ்
சதுர்வாகு மைந்துகரமுஞ்
சார்ந்தசெவ் வாம்பலேயு மறுவரமு துண்டுதோன்
றங்கிவளர் தண்பொகுட்டுத்
தாமரை யிருக்குமவ ளுச்சிறையி லிட்டுவே
தப்பரிந டாத்துவோர்க்குந்
தக்கபடி முற்பிரண வப்பொருளே யற்பினொடு
சாற்றுகுரு வாகிவேலைத்
தானேவி மாமாய மார்சூர னூராவி
தானோட வாற்றிவிண்ணோர்
தங்கடுயர் மாற்றியுட னங்குகுடி யேற்றிவளர்
தண்கருணை மூர்த்தியான
சாமியையு மடிமீ திருத்திவிளை யாடிமகிழ்
சந்தோஷ சம்பூரணி
யடிபாவி நற்றுதி புகன்றுவரு மன்பர்க
ளகத்தடத் திடைமுளைத்தே
யானந்த மானமது வெள்ளப் பெருக்குற
வலர்ந்துவரு தெய்வமலரே
யலேகடலே யண்ணுமன் மலேகொடு கலக்காம
லரவிட் டிழுத்திடாம
லன்புகட லாகநல் லமிவுதமி யாகவதை
யாட்டுதொடர் ஞானமாக
வாக்குமெய்ஞ் ஞானியர்க ளிடைவிடா துண்ணவரு
மரியபே ரருளமிர்தமே
யாவிரை புரந்துமட வாருடை கவர்ந்துசெலு
மாயன் றிருத்தங்கையே
யனைத்துயி ரிடத்துமொர் திலத்தினெ யிருப்பதென
வார்ந்திடு பராசத்தியே

யங்குசத் தொடுபாச முஞ்சூல முங்கொண்ட
வபிராமி யுமையம்மையே
திடத்துறு கரிக்குழு பிடிக்குல மனைத்துட
ரிளைத்துயர் களிப்பினுலவத்
தேனுறு செழுங்கனியை வானர மருந்திமங்
திக்குக் கொடுத்துமகிழத்
தேவர்கோ பதிசபையின் வீசுமா கவரிநிகர்
தென்னையின் பாளைவிரியச்
செங்கதி ரூறும்பரிதி யெங்குறினு முற்வெனுஞ்
சித்தர்பற் பலருலாவத்
தென்பொதி வளங்குலவு செண்பக மகாதேவி
சேர்புகழ்க் கருமலையில்வாழ்
தேவியே வனங்கர ராஜப்ப மகராஜ
சிங்கத்தை யுனதுகருணை
செய்துகாத் திடவேண்டும் வையகத் துனையலாற்
றெய்வம்வே றுளதாகுமோ
செல்லார்ந்த தேங்குழற் கல்லார்ந்த பூண்டனச்
செல்லாண்டி யம்மையுமையே. (க)

முற்றிற்று.

ஆக விருத்தம் காப்புச்செய்யுளுடன் கoo.

திருச்சிற்றம்பலம்.

